# ஸ்டூடியோ கதை

எழுதியவர்: கு.ப. ராஜகோபாலன்

"அம்மா, இதோ பாருங்கள். எங்கே, இன்னும் கொஞ்சம் மேலே பாருங்கள் - இல்லை, கொஞ்சம் பக்கமாக - இல்லை; இப்படி..." என்று சொல்லிக் கொண்டு, மிஸ் சீதாவினுடைய முகத்தை அலட்சியமாகத் தொடுவதுபோலத் தம் கையால் திரும்பினார் டைரக்டர்.

"சார், எவ்வளவு தரம் உங்களுக்குச் சொல்லுகிறது, டைரக்ஷன் மட்டும் செய்யுங்கள் என்று? நீங்கள் எப்படி ஆடச் சொல்கிறீர்களோ ஆடிவிடுகிறேன் - தலை கொடுத்தாகிவிட்டது - ஆனால் மற்றொரு தரமும் கண்டிப்பாகச் சொல்லுகிறேன். என்னைத் தொடக் கூடாது!" என்று சீதா கோபத்துடன் சொன்னாள்.

"தொடாமல் எப்படி முடியும், அம்மா? ஸ்டூடியோவில் நாங்கள் எல்லாம்..."

"புனிதமான ஆண் பிள்ளைகள்தான்... எனக்குத் தெரியும்."

டைரக்டர் கிருஷ்ணனுக்குக் கோபம் வந்துவிட்டது. எவ்வளவோ நடிகைகளை அவர் ஆட்டி வைத்திருக்கிறார். பெரிய பெரிய நடிகைகளைக்கூடச் சில சமயங்களில் அவர் தம் பூட்சு காலால் இப்படித் திரும்பு, அப்படித் திரும்பு என்று திருப்பி டைரக்ஷன் செய்திருக்கிறார். இவள் என்னவோ ரொம்பப் பிகுவாக இருக்கிறாளே. எம்.ஏ. படித்திருந்தால் என்ன? ஆடுவதென்று ஸ்டூடியோவுக்குள் அடியெடுத்து வைத்துவிட்டால் டைரக்டருக்கு அடிமைதானே! ரொம்ப யோக்கியமோ இவள்? நான் தொட்டால் இவளுக்கு என்னவோ ஒட்டிக்கொண்டு விடுகிறதோ? என்று அவர் எண்ணலானார்.

"இப்படியெல்லாம் பூச்சி பிடித்தால் படம் எடுக்க முடியாது, தெரியுமாம்மா?"

"முடியவே வேண்டாம்!" என்று சீதா தீர்மானகச் சொன்னாள்.

எம்.ஏ. பரீட்சையில் தேறினவுடனேயே டாக்கியில் சேருவதென்று தீர்மானம் செய்தாள் சீதா. அவள் டாக்கிக் கலையின் முன்னேற்றத்தில் ஆசை கொண்டவள். அதில் நடிகர்களும் நடிகைகளும் திறமையுடனும் உணர்ச்சியுடனும் நடிக்க வேண்டுமென்பது அவளது அவா.

படித்த பெண்கள் படக் காட்சிகளில் பாத்திரங்களாக நடித்து வழி காட்டினால் தான் தற்காலம் நடிகைகளில் வாழ்வில் இருக்கும் சில ஊழல்கள் தொலையும் என்பது அவளது எண்ணம்.

நடிப்புத் தொழிலில் தூய்மை ஏற்பட்டுவிட்டால், குடும்பப் பெண்களும் தாராளமாக அதில் ஈடுபடலாம் என்று அவள் கனாக் கண்டாள். நடிப்பு என்றால் அசிங்கமான பாட்டுக்கள் இன்றி உணர்ச்சியுடன் அமைய வேண்டும். இத்தகைய உயர்தர நடிகர் நடிகைகளைக் கொண்டு நல்ல கதைகள் எடுத்தால் நிச்சயமாக அவை சமூகத்தின் கலையுணர்ச்சியையும் இன்பத்தையும் மிகுதியாக்கும் என்றெல்லாம் எண்ணினாள். அதற்கு முதற்படியாகத் தானே டாக்கியில் சேர்ந்து வழிகாட்டவேண்டும் என்பது அவளது நோக்கம்.

உஷா தியேட்டர்ஸ் என்ற கம்பெனியார் தயாரிக்க முன்வந்த பார்வதி பரிணயம் என்ற படத்தில் பார்வதியாக ஒடிக்க ஒப்புக் கொண்டாள் சீதா.

காளிதாசன் குமார சம்பவத்தில் சித்திரித்திருக்கும் பார்வதியின் உருவம் அவளது மனத்தில் படமாகப் பதிந்திருந்தது. அந்த மகாகவியின் சித்திரிப்பைப் பின்பற்றித்தான் பார்வதியாக நடிக்க வேண்டுமென்று தீர்மானித்தாள்.

இமயமலையின் சாரலில் பார்வதி தவக்கோலத்துடன் இருக்கிறாள். தோழிகள் இருவர்கூட இருக்கிறார்கள். அவளது மனம் சிவபெருமானுடைய வடிவத்தில் ஒன்றிப் போயிருக்கிறது. மெய்ம்மறந்து உலவுகிறாள். பனிக்காலம் மறைந்து இளவேனில் தோன்றிவிட்டது.

நாடகப் படுதாவைப்போல அந்தப் பருவத்துப் பூரிப்பு திடீரென்று பூமியின்மேல் தென்பட்டது. சிவபிரானின் தவக்கோலம் போன்று தூயவெண்மையாக இருந்த இடம் பல நிறங்கள் கொண்ட சக்தியின் மாய உருக்கொண்டது. தனிமையும் அமைதியும் குடிகொண்டிருந்த இடம் பறவைகளின் நாதம் நிறைந்து மனம் தடுமாறும் சஞ்சலத்தை ஊட்டும் பூமியாக மாறிற்று.

அன்றுவரை ஒருவிதமான களங்கமும் இல்லாத மனத்துடன் சிவபிரானைத் தொழுது வந்த பார்வதிக்கு அன்று சொல்ல முடியாத ஏக்கம் ஒன்று ஏற்பட்டது. அன்றாட வழிபாட்டுக்கு இடையூறு ஏற்படும்படியாக ஒரு சோர்வும் அவளுக்கு உண்டாயிற்று. சிவனை அர்ச்சிக்கப் பறித்து வந்த மலர்களிலிருந்து வந்த மணம் அன்று என்னவோ அவள் உள்ளத்தை என்றுமில்லாதபடி கலக்கிற்று. அன்று அடித்த காற்று அவளது புலனுக்கு ஏதோ மகிழ்ச்சிக் கடலில் திளைப்பது போல் இருந்தது; அது வெறும் தென்றலன்று. தோழிகள் பார்வதியின் மனநிலையைக் கண்டுகொண்டு விட்டார்கள். கேலி செய்யலாயினர். மன்மதனின் பாணம் வேலை செய்ததோ?

பார்வதி வேடம் பூண்ட சீதா பார்வதிபோலவேதான இருந்தாள். மெய்நிறைந்த இளமையின் முழு நிறைவு அவளுடைய கண்களிலும் இதழ்களிலும் ததும்பிக் கொண்டிருந்தது அப்பொழுதுதான் நீராடி விட்டுத் தலைமயிரை முடித்திருந்தாள்.

அதில் தூய மலர்களைச் செருகியிருந்தாள். நெற்றியிலும் கைகளிலும் அழகான சிறு விபூதிப் பட்டைகள் இருந்தன. புருவங்களுக்கிடையே குங்குமத்தை ஒரு பட்டையாக வைத்துக் கொண்டிருந்தாள். மேலாக்கை மார்பகத்தில் இறுக்கி இடுப்பில் கொண்டுவந்து செருகிக் கொண்டு இருந்தாள். இந்து நாகரிகத்தின் தொடக்க காலத்தில் கஞ்சுகம் என்று பின்னால் ஏற்பட்ட ரவிக்கை இல்லை.

சிறிய மணிகள் கட்டிய ஓர் ஒட்டியாணம் புடவையின் மேல் இறுகிப் படிந்திருந்தது. முழங்கையின் அருகே தோள்களில் தோளணிகள் அணிந்திருந்தாள். சிவனை வழிபட அப்பொழுதுதான் கொய்த வில்வத்தை ஏந்தி நின்றாள். அந்த நிமிடத்தில் சீதா தானே உமை என்று எண்ணி விட்டாள்.

பார்வதியின் தோழி அவளிடம் நெருங்கி அவளுடைய இளமையைக் குறித்துக் கேலி செய்யும் சமயம் அது.

"பரமசிவனை மணக்க விரும்புகிறாய். இன்று உன் மனம் உன் வசம் இல்லை. வயசாயிற்று அல்லவா? உன் அங்கங்களே சொல்லுகின்றனவே!" என்று சொல்லி ஒரு மாதிரியாகப் பார்த்துச் சிரிக்கிறாள் தோழி.

பார்வதி கோபம் கொண்டவள்போல புருவங்களை நெரிக்கிறாள். நெற்றிக் குங்குமம் வளைகிறது.

"தூய்மையான நேரத்தில் என்ன பேச்சடி இது?" என்கிறாள் சீதா.

அந்தக் குரலில் சற்றே கோபமும் சற்றே பாசாங்கும் இருக்கின்றன. தோழியை விட்டு விலகுபவள்போல ஒருபுறம் திரும்புகிறாள் புருவ நெரிப்புடன்.

"அம்மா, மார்புச் சேலையைச் சற்றுத் தளர விட்டால் தேவலை" என்று சொல்லிக்கொண்ட டைரக்டர் கையால் ஜாடை காட்டினார்.

"இறுக்கிக் கட்டி ஒட்டியாணம் போட்டிருக்கிறேன்!" என்று சொல்லி, சீதா டைரக்டரை எரித்துவிடுபவள் போலப் பார்த்தாள். தான் பார்வதியாக ஈடுபட்டிருந்த லயிப்பை அவர் கலைத்ததற்காக அவளுக்கு மிக மிஞ்சிய கோபம் வந்தது.

"டைரக்டர் சொல்வதைக் கேட்காவிட்டால் படம் உருப்படாது. நான் சொல்லுகிறபடி நீங்கள் செய்யாவிட்டால் தோழியின் பரிகாசம் அர்த்தமில்லாமல் போகும்."

"போகாது! எனக்குப் புத்தி இருக்கிறது. இருக்கிறபடியே இருப்பதுதான் அதைக்காட்டிலும் நல்லது.

"உங்கள் யோசனை தப்பு. எனக்கு நீங்கள் டைரக்ஷன் சொல்லித் தர வேண்டாம். தெரியாவிட்டால் கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது நான் சொல்லுகிறபடிச் செய்யுங்கள். ஒட்டியாணத்தையாவது கழற்றி விடுங்கள். மேலாக்குத் தளரும்."

டைரக்டர் சொல்வது வெறும் பிதற்றல் என்பது சீதாவின் எண்ணம். மேலும் அவள் ஒட்டியாணத்தை எடுக்க விரும்பவில்லை. தன் மனத்தில் பதிந்திருந்த பார்வதியின் சித்திரத்தில் அது ஓர் இன்றியமையாத அலங்காரம். அன்றியும், அதனால் ஆடையும் உடலில் ஒட்டியிருந்தது.

ஆனால் டைரக்டர் பிடிவாதம் செய்தார். விருப்பமே இல்லாமல் அதைக் கழற்றினாள். ஆனால் கையிலேயே வைத்துக் கொண்டிருந்தாள்.

"ஏனம்மா, நாழிகை ஆகிறதே - ஒரு காட்சிக்கு இவ்வளவு நேரமானால் இன்று நூறடிகூட எடுத்தாகாது. எங்கே கொஞ்சம், இப்படி" என்று கிருஷ்ணன் சீதாவின் மார்புச் சேலையை விரல்களால் தொட்டு இழுத்தார்.

சீதாவுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்து விட்டது. அவள் என்ன செய்தாள் என்று அவளுக்கு தெரியவில்லை.

கையிலிருந்த ஒட்டியாணத்தை டைரக்டர் முகத்தில் வீசி எறிந்தாள். திடீரென்று பின்வாங்கிய வண்ணம், அவர் விர்ரென்று திரும்பி வெளியே போய்விட்டாள்.

"ஸ்டூடியோவிற்கு எதற்கு வருகிறாள் இந்தப் பதிவிரதை? கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசையோ?" என்று டைரக்டர் கிருஷ்ணன் முகத்தைத் தடவிக் கொண்டு, உதவி டைரக்டரைக் கேட்டார்.